 7317



පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

16 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## இஸ்லாம் I

**கவனிக்க :**

(i) எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) 1 தொடக்கம் 40 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
(iii) உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

1. அல் - குர்ஆனில் காணப்படும் ஸூராக்களது எண்ணிக்கை
(1) 286 (2) 114 (3) 88 (4) 16

2. 'ரிழா' என்பது
(1) ஒரு விடயத்தில் போதும் என்ற நிலைப்பாட்டை அடைவது
(2) ஒன்றை ஏற்று மனத்திருப்தி அடைவது
(3) நன்மையின் பால் விருப்புக் கொள்வது
(4) அல்லாஹ்வின் நாட்டத்தில் உறுதி கொள்வது

3. வரலாற்றில் எந்த நகரம் 'யத்ரிப்' என அழைக்கப்பட்டது?
(1) கெய்ரோ (2) மதீனா (3) மக்கா (4) குபா

4. வட்டியைச் சுட்டும் அறபுப் பதம்
(1) முழாரபா (2) முதாரஆ (3) ரிபா (4) பைஉ

5. இபுனு இஸ்ஹாக்கினால் எழுதப்பட்ட வரலாற்று நூல் யாது?
(1) ஹிகாயதுஸ் ஸஹாபா (2) தபகாதுல் கபீர் (3) ஸீரது ரஸூலில்லாஹ் (4) முகத்திமா

6. மிஃராஜின் போது, கிடைக்கப் பெற்ற கட்டாய அமல்
(1) ஐங்காலத் தொழுகை (2) ரமழான் நோன்பு (3) ஸகாத் (4) ஹஜ்

7. தஃஸீர் என்பது
(1) வரையறுக்கப்பட்ட தண்டனை (2) நஷ்டஈடு கோரல்
(3) நீதிபதி தீர்மானிக்கும் தண்டனை (4) பழிக்குப் பழி வாங்குதல்

8. 'அல்லாஹ்விடம் பொறுப்புச் சாட்டுதல்' என்பதைச் சுட்டும் பதம்
(1) தவக்குல் (2) வகாலத் (3) ஈலாஉ (4) தவாகுல்

9. நடு இருப்பில் ஓதப்படும் ரப்பிஃ பிர்லி வர் ஹம்னி... என்ற தொடரில் அடுத்துவருவது
(1) வர்பஉனி (2) வஜ்புர்னி (3) வர்ஸுக்னீ (4) வஹ்தினீ

10. அர்கானுல் கியாஸ் இல் 'இல்லத்' என்பது
(1) சட்டம் (2) காரணம் (3) அடிப்படை விடயம் (4) துணை விடயம்

11. பூமியை வளப்படுத்தும் செயன்முறை
(1) இமாரத் எனப்படும். (2) கிலாபத் எனப்படும். (3) ஸிகாயத் எனப்படும். (4) இபாதத் எனப்படும்.

12. பின்வருவனவற்றுள் ஒத்த கருத்தைக் கொண்ட சொற்சோடியைத் தெரிவு செய்க.
(1) மஹ்ரம் - அஜனபி (2) ஹலால் - ஹராம் (3) முஜ்தஹித் - முகல்லித் (4) பகீர் - மிஸ்கீன்

13. நபி தாவூத் (அலை) மேற்கொண்ட தொழில்
(1) தையல் (2) கொல்லத் தொழில் (3) வர்த்தகம் (4) விவசாயம்

[பக். 2 ஐப் பார்க்க

14. கீழே 'அ' நிரலில் சில சொற்களும் 'ஆ' நிரலில் அவற்றின் கருத்துக்களும் தரப்பட்டுள்ளன.

| 'அ' | 'ஆ' |
|---|---|
| (i) ரிஸாலத் | A - இணைவைப்பு |
| (ii) ஷிர்க் | B - குடும்பம் |
| (iii) உஸ்ரத் | C - ஏற்றுக்கொள்ளல் |
| (iv) கபூல் | D - தூது |

இங்கு நிரல் 'அ' இற்கமைய நிரல் 'ஆ' ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள தெரிவு யாது?
(1) A B C D (2) B C A D (3) C A D B (4) D A B C

15. 'கவ்ப்', 'ரஜா' என்பன உணர்த்தும் பொருள்கள் முறையே,
(1) அச்சம், ஆதரவு (2) திருப்தி, பொறுமை (3) அச்சம், பேணுதல் (4) திருப்தி, கைசேதம்

16. அய்யாமுத் தஷ்ரீக் இற்குரிய நாட்களின் எண்ணிக்கை
(1) 02 (2) 03 (3) 05 (4) 07

17. "நிச்சயமாக நிராகரிப்போரைத் தவிர்த்து மற்றெவரும் அல்லாஹ்வின் அருளில் நம்பிக்கை இழக்கமாட்டார்கள்" என்பது
(1) அல்-குர்ஆன் வசனம் (2) இமாம்களது கருத்து
(3) ஸஹாபாக்களது கருத்து (4) அல்-ஹதீஸ் வசனம்

18. மதீனாவைப் பிறப்பிடமாகக் கொண்ட இமாம்
(1) இமாம் முஸ்லிம் (ரஹ்) (2) இமாம் மாலிகி (ரஹ்) (3) இமாம் அஹ்மத் (ரஹ்) (4) இமாம் நஸாஈ (ரஹ்)

19. தங்கத்துக்கான நிஸாப் அளவு
(1) 20 கிராம் (2) 85 கிராம் (3) 95 கிராம் (4) 672 கிராம்

20. கீழே 'அ' நிரலில் குற்றங்களும் 'ஆ' நிரலில் அவற்றுக்கு இஸ்லாத்தினால் அங்கீகரிக்கப்பட்டுள்ள தண்டனைகளும் தரப்பட்டுள்ளன.

| 'அ' | 'ஆ' |
|---|---|
| (i) ரித்தத் | A - 80 கசையடி |
| (ii) அவதூறு | B - கரச் சேதம் |
| (iii) மது அருந்தல் | C - மரண தண்டனை |
| (iv) களவு | D - 40 கசையடி |

இங்கு நிரல் 'அ' இற்கமைய நிரல் 'ஆ' ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள தெரிவு யாது?
(1) A C B D (2) B A D C (3) C A D B (4) D B C A

21. ஹிஜ்ரத் இடம்பெற்ற மாதம்
(1) முஹர்ரம் (2) ரபீஉல் அவ்வல் (3) றஜப் (4) ரமழான்

22. ஹனீப்களில் ஒருவர்
(1) வரகா பின் நவ்பல் (2) அபூசுப்யான் பின் ஹர்ப்
(3) அபூதாலிப் பின் அப்துல் முத்தலிப் (4) காலித் பின் வலீத்

23. ஒருவர் மரணித்த செய்தியைக் கேள்வியுற்றால் சொல்வது
(1) அல்ஹம்துலில்லாஹ் (2) யர்ஹமுகு முல்லாஹ்
(3) இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன் (4) நஊதுபில்லாஹி மின்ஹா

24. நபி (ஸல்) அவர்கள் மக்காவுக்கு வெளியே த∴வாவுக்குச் சென்ற இரு இடங்கள்
(1) கூபா, மதீனா (2) யஸ்ரிப், தாயிப் (3) ஹபஷா, ஷாம் (4) யமன், ஜெரூசலம்

25. 'உம்முல் மஸாகீன்' என சிறப்புப் பெற்ற அன்னை
(1) கதீஜா (ரழி) (2) உம்மு ஹபீபா (ரழி) (3) ஸைனப் (ரழி) (4) உம்மு ஸல்மா (ரழி)

26. பத்து ஆண்டுகள் இ∴திகாப் இருப்பதை விட அதிக நன்மைகள் கொண்டதாக நபியவர்களால் எடுத்துரைக்கப்பட்ட செயல்
(1) பெற்றோரைக் கண்ணியப்படுத்துதல் (2) பிற சகோதரனின் தேவையைப் பூர்த்தி செய்ய உதவுதல்
(3) அனாதைகளை ஆதரித்தல் (4) இறை பாதையில் போராடுதல்

27. பின்வருவனவற்றுள் சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) இஜமாஉல் அக்ஸரிய்யா என்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட தீர்ப்பொன்றாகும்.
(2) மணமகளால் மணமகனுக்கு மஹர் வழங்கப்படும்.
(3) போலி நபித்துவம் கலீபா அபூபக்ர் (ரழி) காலத்தோடு முற்றுப் பெற்றுவிட்டது.
(4) குல்லதைனை விட அதிகமான நீரை 'அல்மாஉல் கலீல்' என்பர்.

[பக். 3 ஐப் பார்க்க

28. செயல் சார்ந்த குப்ருக்கு உதாரணம்
(1) மறுமையை நம்ப மறுப்பது
(2) அல்லாஹ்வுக்கு நிகராக பிறிதொன்றை வணங்குவது
(3) நபியவர்களைத் தூசிப்பது
(4) அல்லாஹ்வின் திருநாமங்களை மறுப்பது

29. 'ஸதகதுல் ஜாரியா' எனப்படுவது
(1) என்றும் நன்மை தரும் நிரந்தர தர்மம்
(2) அல்லாஹ் - அடியான் இடையிலான தொடர்பு
(3) ரமழான் மாதம் முடிவுற்றதும் வழங்கப்படும் ஸதகா
(4) ஏழை, எளியோர்க்கு வாரி வழங்குதல்

30. 'அஸ்ஸிஹாஹுஸ் ஸித்தா' எனப்படுவது
(1) ஆறு பிக்ஹு நூல்களாகும்.
(2) நம்பத்தகுந்த ஆறு ஹதீஸ் கிரந்தங்களாகும்.
(3) வரலாற்றுத்துறை சார்ந்த ஆறு நூல்களாகும்.
(4) புகழ் பூத்த மருத்துவ நூல்களாகும்.

31. அல் - குர்ஆன் குறிப்பிடும், ஸகாத் பெறத் தகுதியான குழுவினரின் எண்ணிக்கை
(1) 6
(2) 7
(3) 8
(4) 10

32. "பெண்கள் ஆண்களிடம் ஒப்படைக்கப்பட்ட அமானிதங்கள்" என நபியவர்கள் குறிப்பிட்ட சந்தர்ப்பம்
(1) மக்கா வெற்றியின் போது
(2) கதீஜா (ரழி) வபாத்தான போது
(3) மதீனா சாசனத்தில்
(4) ஹஜ்ஜதுல் விதாவின் போது

33. பின்வருவோருள் அஹ்லுல் பைத்தைச் சேர்ந்தவர்
(1) அபூஹுறைரா (ரழி)
(2) அம்மார் (ரழி)
(3) ஸஃத் பின் அபீ வக்காஸ் (ரழி)
(4) அப்பாஸ் (ரழி)

34. நோன்பின் பர்ளுகள் இரண்டில், முதலாவது நிய்யத்தாகும். மற்றையது
(1) நோன்பு நோற்பதற்கான சக்தியைப் பெற்றிருத்தல்
(2) கிழக்கு வெளுத்தது முதல் சூரியன் மறையும் வரை நோன்பை முறிக்கும் எக்காரியத்திலும் ஈடுபடாதிருத்தல்
(3) ஸுபஹுடைய தொழுகைக்கு முன் ஸஹர் செய்தல்
(4) ரமழான் நாட்களில் இராவணக்கங்களில் ஈடுபடுதல்

35. கீழே 'அ', 'ஆ' ஆகிய நிரல்களிலுள்ள விடயங்களைக் கருதுக.

| 'அ' | 'ஆ' |
|---|---|
| (i) அஜாஇபுல் ஹிந்த் | A - கானூன் |
| (ii) சோனகர் | B - இப்னு ஸஹ்ரயார் |
| (iii) அல் - ஹாவி | C - வான்சன்டேன் |
| (iv) அலி பின் ஸீனா | D - ஸகரிய்யா அர் - ராஸி |

இங்கு நிரல் 'அ' இற்கமைய நிரல் 'ஆ' ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள தெரிவு யாது?
(1) A B C D
(2) B C D A
(3) C B A D
(4) D A B C

36. 'தலாக் ரஜஈ' என்பது
(1) மீட்டுக் கொள்ளத்தக்க தலாக்
(2) முழுமை பெற்ற தலாக்
(3) கணவன், மனைவியைப் பிரித்து வைத்தல்
(4) மனைவி தன் கணவனிடமிருந்து விவாகரத்து கோரல்

37. பின்வருவனவற்றுள் நபிகளாரைச் சுட்டுவது எது?
(1) ரப்புன்னாஸ்
(2) ஹுதன் லின்னாஸ்
(3) ரப்புல் ஆலமீன்
(4) ரஹ்மதன் லில்ஆலமீன்

38. 'முஹத்திஸ்' எனப்படுபவர்
(1) பிக்ஹுத்துறை அறிஞராவார்.
(2) குர்ஆன் விளக்கவுரையாளராவார்.
(3) ஹதீஸ்துறை அறிஞராவார்.
(4) இஜ்திஹாத் செய்பவராவார்.

39. "மார்க்கத்தில் பலவந்தம் இல்லை" என்பது
(1) ஹதீஸ் வசனமாகும்.
(2) அல் - குர்ஆன் வசனமாகும்.
(3) கலீபா உமர் (ரழி) அவர்களின் கூற்றாகும்.
(4) இமாம் அஹ்மத் பின் ஹன்பலின் (ரஹ்) கருத்தாகும்.

40. அகீதாத்துறை அறிஞர்களின் கருத்தின்படி பௌதிக உலகுக்கும் புலன்களுக்கும் அப்பாற்பட்ட விடயங்களை உள்ளடக்கியுள்ள பகுதி
(1) அல் - இலாஹிய்யாத்
(2) அந் - நுபுவ்வாத்
(3) அஸ் - ஸம்இய்யாத்
(4) அர் - ருஹானிய்யாத்

* *

[பக். 4 ஐப் பார்க்க

පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

16 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

## இஸ்லாம் II

※ **முதலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து, மொத்தமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

※ முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** சுருக்கமான விடை தருக.

(i) நோன்பை முறிக்கக்கூடிய அம்சங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) ஹுகூகுல்லாஹ், ஹுகூகுல் இபாத் ஆகியவற்றை வரைவிலக்கணப்படுத்துக.

(iii) கலீபா அபூபக்ர் (ரழி) அவர்களால் வெற்றி கொள்ளப்பட்ட **இரண்டு** போலி நபிமார்களின் பெயர்களை எழுதுக.

(iv) புகாராவையும் திர்மிதையும் பிறப்பிடமாகக் கொண்ட **இரண்டு** முஹத்திஸ்களது பெயர்களை எழுதுக.

(v) தான் உழைத்துப் பெற்றுக்கொள்வதற்கு மேலதிகமாக பொருட்கள் கிடைக்கப்பெறும் **இரண்டு** வழிமுறைகளும் யாவை?

(vi) 'ஹத்' என்ற வரையறைக்குள் அடங்கும் **இரண்டு** குற்றங்களைக் குறிப்பிடுக.

(vii) உஸ்மான் (ரழி) அவர்களுக்குக் கிடைக்கப்பெற்ற **இரண்டு** சிறப்புப் பெயர்களும் யாவை?

(viii) மிஃராஜ் பயணத்தில் பயன்படுத்தப்பட்ட பிராணியின் பெயரையும், தொழுகை விடயத்தில் நபியவர்களுக்கு ஆலோசனை வழங்கிய நபியின் பெயரையும் எழுதுக.

(ix) தாயின் மதிப்பையும் அந்தஸ்தையும் எடுத்துக்காட்டும் வகையில், நபிகளார் குறிப்பிட்ட ஒரு ஹதீஸையும் அதன் பொருளையும் தருக.

(x) உள ஆரோக்கியத்துக்கு பாதிப்பை ஏற்படுத்தும் **இரண்டு** காரணிகளைக் குறிப்பிடுக.

**2.** (i) பர்ளின் **இரண்டு** வகைகளும் எவை?

(ii) ஜனாஸாவுக்குரிய பர்ளுகள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(iii) ஜனாஸாவில் கலந்து கொள்வதன் மூலம் பெற்றுக்கொள்ளத்தக்க படிப்பினைகள் யாவை?

**3.** (i) 'ஹதீஸ்' என்பதன் பரிபாஷைக் கருத்தை எழுதுக.

(ii) நோன்பு, விதிவிலக்களிக்கப்பட்ட **மூன்று** குழுவினரையும் குறிப்பிடுக.

(iii) முஜ்தஹித்கள் பெற்றிருக்க வேண்டிய **ஐந்து** தகைமைகளைச் சுருக்கமாக விளக்குக.

**4.** (i) 'முஹாஸபா' என்பதன் மூலம் விளங்கிக்கொள்வது யாது?

(ii) இஸ்லாமிய குற்றவியல் தண்டனை வகைகள் **மூன்றையும்** குறிப்பிடுக.

(iii) குற்றங்கள் **நிகழாதிருக்க** இஸ்லாம் வகுத்துள்ள வழிமுறைகள் **ஐந்தை** சுருக்கமாக விவரிக்குக.

**5.** (i) நபியவர்கள் எங்கிருந்து எந்த இடத்துக்கு ஹிஜ்ரத் சென்றார்கள்?

(ii) ஹுதைபிய்யா உடன்படிக்கையின் **மூன்று** நிபந்தனைகளைக் குறிப்பிடுக.

(iii) ஹஜ்ஜதுல் விதாவில் முன்வைக்கப்பட்ட **ஐந்து** உபதேசங்களைச் சுருக்கமாக விளக்குக.

**6.** (i) தொழுகையில் முதலாவது ரக்அத்தில் இடம்பெறும் பர்ளுகள் **இரண்டைத்** தருக.

(ii) ஸகாத் விதியாகும் **மூன்று** பொருட்களைப் பெயரிடுக.

(iii) ஸகாத் பெறத் தகுதியான **ஐந்து** கூட்டத்தினரை சுருக்கமாக அறிமுகப்படுத்துக.

**7.** (i) 'தௌபா' என்றால் என்ன?

(ii) தௌபாவின் போது அவசியமாகப் பேண வேண்டிய **மூன்று** விடயங்களும் யாவை?

(iii) நடைமுறையில் இளைய சமுதாயத்தினரை நல்வழிப்படுத்தப் பொருத்தமான **ஐந்து** ஆலோசனைகளை முன்வைக்குக.

※※※